[28th January 1961

SRI M. KALYANASUNDARAM : ரேடியோ வைத்ததன் விளைவாக பஸ்கள் விபத்துக்குள்ளான தகவல் அமைச்சர் அவர்களிடம் இருக்கிறதா? அப்படி இல்லையென்றால், பஸ்கள் ஓடும் சமயத்தில் வேண்டுமானால் ரேடியோக்களை வைக்கக்கூடாது என்ற நிபந்தனைக்குட்பட்டு பஸ்கள் நின்றுகொண்டிருக்கும்பொழுது ரேடியோக்கள் வைக்கலாம் என்ற அடிப்படையிலே ரேடியோ வைப்பதற்கு அனுமதி அளிக்கப்படுமா?

THE HON. SRI V. RAMAIAH : இந்த விபத்துகள் பற்றிய புள்ளி விவரம் என்னிடம் இப்பொழுது இல்லை. அதுபற்றி தனியாகக் கேள்வி போட்டால் அதைக் கொடுப்பதற்கு தயாராக இருக்கிறேன். பஸ்கள் ஓடும்போது ரேடியோ வைத்தால்தான் ஏதேனும் பிரயோசனமாக இருக்கும். நிற்கக்கூடிய நேரத்தில் ரேடியோவை முடுக்கிவிட்டால், அதை யார் கேட்பது என்று எனக்குப் புரியவில்லை. அடிக்கடி பஸ்கள் நிற்கக்கூடிய நேரத்தில் நான் பார்த்திருக்கிறேன். அங்கு பிரயாணிகள் போடுகிற சத்தமே போதும். அதோடுகூட ரேடியோ சத்தமும் சேர்ந்தால் அது பிரயாணிகளுக்கு அதிகமாக தொந்தரவு கொடுக்கும். ஆகையால் இந்த ஆலோசனையை ஏற்றுக்கொள்ளுவதற்கு தயாராக இல்லை.

SRI P. G. MANICKAM : சர்க்காருடைய பஸ்களில் எத்தனை பஸ்களில் ரேடியோக்கள் வைக்கப்பட்டிருக்கின்றன?

THE HON. SRI V. RAMAIAH : எந்த பஸ்ஸிலும் ரேடியோ வைத்துக்கொள்ள முடியாது.

*House-rent*

*209 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether the Government have any proposal to bring a legislation to fix a ceiling on the income accrued from the letting of residential and non-residential buildings?

THE HON. SRI V. RAMAIAH : No, Sir.

*Women village munsifs*

*210 *Q.*—SRI S. RAMALINGA PADAYACHI : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கிராம மணியக்காரர் (Village Munisif) வேலை பெண்களுக்குக் கொடுக்கும் உத்தேசம் உண்டா?

(இ) இல்லையென்றால், காரணமென்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) At present women are eligible for appointment as village headmen if they possess the prescribed qualification for the post.